# திருநெல்லை

79

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - தை - 2019 - ஜனவரி



கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன் மேல்நிலைப்பள்ளி ஆண்டு விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - தை - 2019 - ஜனவரி இதழ் - 79

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்

# இறை வணக்கம்

மலையரையன் பன்னகத்தன் மாதேவன்
மான்மழுதீ சுமந்த கையன்
மதுநதியில் ஆடுபவர் மயலறுப்பான்
மாசடைமேல் அரவ ணிந்தான்
மந்திரமாம் அஞ்செழுத்தை மனங்கொண்டார்
மனமிடமாய் மதிக்கும் தேவன்
கலையரசி நாவிருந்து கவிசொல்லக்
கற்றவர்தம் நெஞ்சு தேடிக்
காதலிப்பாள் நாவரசி அருகிருந்து
கந்தருவப் பண்கள் பாடக்
கண்டுருகி அருள்வழங்கு கவுமாரி
கழனிவாசல் நெல்லை அன்னை
நிலையரசு புரிகின்றாள் நித்தநித்தம்
நீங்காதாள் அடியர்க் காக
நின்றுதவு மாதேவி திரிசூலி
நிமலைபரா சக்தி என்னும்
நிர்மலப்பொன் வடிவி னாளை
நினைக்கின்ற நேசர் கூடித்
தலையாய தெய்வமெனக் கொண்டாடும்
தனிப்பெரிய கோவி லூரின்
தங்கமகள் நீயென்று தாள்வணங்கித்
தலைக்கொண்டோம் தாங்கிக் காக்கும்
தாயே உன் தயவிருந்தால் என்னகுறை
தயவுவைத் தருளு வாயே!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)



# ஆசியுரை

## *சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்*

தன்னைத்தானே காத்துக் கொள்வதற்கும், தன்னைத் தாக்குபவர்களை எதிர்த்துத் தாக்குவதற்கும், எதிர்த்துத் தாக்கித் தன்னைக் காத்துக் கொள்வதற்கும் சட்டப்படி உரிமை இருக்கிறது. அத்தகைய செயல்களை அறநெறிக் கொள்கைகளும் ஒப்புக் கொள்கின்றன.

நியாயத்திற்கும், தர்மத்திற்கும் புறம்பாக நடக்கிறவர்களைத் தட்டிக் கேட்கவும். அம்மாதிரிச் செயல்களை நடைபெறவிடாமல் தடுப்பதற்கும் தர்மத்தில் இடம் உண்டு. சுயநலமில்லாமல் உழைத்து முன்னேறிச் செல்வங்கள் சேர்ப்பதற்கும், சேர்த்தவற்றைக் காப்பதற்கும் என்றைக்கும் தர்மத்தில் இடம் உண்டு, ஆதரவு உண்டு.

இதனைத் தவிர்த்து, சுயநலத்திற்காகப் பிறரைத் துன்புறுத்துவதும், பயமுறுத்துவதும் தர்மத்திற்கு எதிரானவை. தர்மத்திற்கு ஆதரவாக அவ்வழியிலே செல்வங்களைச் சேர்த்தவர்கள் யாருக்கும் எதற்கும் அஞ்சுவதில்லை. சுய நலமும், தேவையற்ற ஆசைகளும் மட்டும் உள்ளவர்களுக்கே அச்சமும், உயிர் பயமும், எப்பொழுதும் இருக்கும். இந்த அச்சத்தையும், பயத்தையும் போக்குவதற்குச் சரியான அணுகுமுறை பாதுகாவலர்களை ஏற்படுத்திக் கொள்வதல்லாது தர்ம வழிக்கு மாறுவதும், அதீத சுயநலத்தைப் புறம் தள்ளுவதுமே ஆகும்.

வாழ்க்கையிலே தர்ம சிந்தனை அவசியம். அவை அறம் சார்ந்தவையாக இருக்க வேண்டும் அதீத ஆசை நாசத்தைத் தான்

சேர்க்கும். தர்ம சிந்தனையோடு வாழ்கின்றவர்கள் துன்பத்திற்கும் சோகத்திற்கும் அஞ்சமாட்டார்கள். வறுமைக்குப் பயப்படமாட்டார்கள். தன்னம்பிக்கையோடு உழைத்து முன்னேற முடியும் என்ற நம்பிக்கை மனதில் வேரூன்றி இருக்கும். ஒருவரது சுயநலமற்ற உழைப்பே செல்வத்தையும், புகழையும் கண்டிப்பாகத் தரும். தர்மத்தின்பால் நம்பிக்கை வைத்து உங்களை நீங்களே நம்பி முயற்சியில் ஈடுபடுங்கள்; வெற்றி உங்களுக்கே. பரம்பொருள் அருளட்டும்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை***



**29.12.2018 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்வில்**
**காரைக்குடி இராமசாமி தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்**
**முனைவர் நாகநாதன் அந்தி மாலை**
**சிறப்புச் செய்காதை பற்றிச் சொற்பொழிவாற்றினார்.**

## அதிமதுர கவிகள் *(தொடர்ச்சி)*

காப்பியக்கவிஞர் நா. மீனவன்

**கரியும் உமியும்**

அடுத்து ஒரு புலவர் கரி என்று தொடங்கி உமி என்று முடியும்படி ஒரு வெண்பாப் பாடுக! என்றதும் காளமேகம் உடனே பாடிய வெண்பா இது.

**கரியதனையே உரித்த கையா வளையேந்(து)**
**அரிஅயற்கும் எட்டாத ஐயா! பரிவாக**
**அண்டர் எல்லாம் கூடி அமுதம் கடைந்த பொழு(து)**
**உண்டநஞ்சை இங்கே உமி**

***இதன் பொருள் :*** தாருகாவனத்து முனிவர்கள் சிவனைக் கொல்ல அனுப்பிய யானையின் தோலை உரித்த கையினை உடையவனே! சங்கைக் கையிலே ஏந்திய திருமாலுக்கும் அயனுக்கும் அடி முடி காண இயலாத ஐயனே! தேவர்கள் அனைவரும் மிக்க விருப்பத்தோடு அமுதம் பெற வேண்டிக் கடலைக் கடைந்த பொழுது தோன்றிய ஆலகால நஞ்சை உண்ட நீ அந்த நஞ்சை இங்கே உமிழ்வாயாக!

**சீத்துப் பூத்து**

மற்றும் ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி சீத்துப் பூத்து என்ற சொல் வருமாறு ஒரு வெண்பாப் பாடுவீரா? என்று கேட்க உடனே காளமேகம் பாடிய வெண்பா இது.

**அப்பூரும் செஞ்சடைமேல் அம்புலியைப் பார்த்துப்பார்த்(து)**
**எப்போதும் சீத்துப்பூத்(து) என்னவே - எப்போதும்**
**வால் அங்(கு) ஆட் டாநிற்கும் வாய்அங்கா வாய்நிற்கும்**
**ஆலங்காட் டானபூண் அரா**

***இதன் பொருள் :*** திருவாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்கும் எம்பெருமான் அணிந்துள்ள பாம்பானது கங்கை தங்கியுள்ள சிவனின் திருமுடிமேல் உள்ள இளம்பிறையைப் பார்த்துப் பார்த்து எப்பொழுதும் சீத்துப் பூத்தென்று முப்போதும் வாலாட்டிக் கொண்டிருக்கும். வாலாட்டியதோடு எப்பொதும் வாய் அங்காந்து நிற்கும்.

**முக்கால் முதல் கீழரை வரை**

முக்கால் முதல் கீழரை வரை வரிசை முறை மாறாது ஒரு

வெண்பாப் பாடும் என்று ஒரு புலவர் கேட்டதும் காளமேகம் பாடிய வெண்பா இது.

**முக்காலுக்(கு) ஏகாமுன் முனநரையில் வீழாமுன்**
**அக்கா லரைக்கண்(டு) அஞ்சாமுன் - விக்கி**
**இருமாமுன் மாகாணிக்(கு) ஏகாமுன் கச்சி**
**ஒருமாவின் கீழரைஇன்(று) ஓது**

***இதன் பொருள் :*** முதுமைப் பருவம் எய்தி அதனால் இரண்டு காலொடு கையில் ஒருதடியைப் பிடித்து மூன்று கால் ஊன்றி நடக்கும் நிலையை அடையும் முன்னர் தளர்ச்சியோடு நரைப்பருவத்தை அடையும் முன்னர் முதிர்ச்சி வந்த நிலையில் உயிர்கவர வரும்போது அந்த எமனுக் கஞ்சாது விக்கலும் இருமலும் வரும் முன்னர் பெருநிலம் என்று சொல்லக் கூடிய சுடுகாட்டிற்குச். செல்லும் முன்னர் காஞ்சிபுரத்திலே ஒப்பற்ற மாமரத்தின் கீழ் வீற்றிருக்கும் ஏகாம்பர நாதரைப் போற்றி வணங்குவாயாக. இந்த வெண்பாவில் முக்கால் அரைக்கால் அரை காணி முதலிய அளவைகள் கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

**ஐந்து டு ஒரு வெண்பாவில் வருமாறு பாடியது**

ஐந்து டு ஒரு வெண்பாவில் வருமாறு பாடுக! என்று ஒருபுலவர் கேட்க அவ்வாறே காளமேகம் பாடியது இது.

**ஓகாமா வீதோடு நேரொக்க டுடுடுடு**
**நாகர் குடந்தை நகர்க்கதிபர் - வாகாய்**
**எடுப்பர் நடமிடுவர் ஏறுவர்அன் பர்க்குக்**
**கொடுப்பர் அணிவர் குழை**

***இதன் பொருள் :*** இளமரச் சோலைகள் நிறைந்த கும்பகோணம் என்னும் திருக்குடந்தை நகருக்கு இறைவனாகிய சிவபெருமான் ஓகா மாவீஅவர் தோ என்ற ஐந்து எழுத்துக்களையும் டு டு டு டு டு என்ற ஐந்து எழுத்துக்களுடன் முறையே பொருத்தினால் இறைவன் பிச்சாடண மூர்த்தியாக வந்த போது எடுத்தது ஓடு. அவர் நடனமிடும் இடம் காடு அவருடைய வாகனம் மாடு அடியவர்களுக்குக் கொடுப்பது வீடு.

**முச்சங்கத்தார் தலைவர்கள்**

முச்சங்கத்தார் அவர்கள் இயற்றிய நூல்கள் ஆகிய இவற்றை ஒரு

வெண்பாவில் அமைத்துக் கூறுக! என்ற புலவருக்குக் காளமேகம் கூறிய வெண்பா இது.

**நூலாநா லாயிரநா நூற்றுநாற் பத்தொன்பான்**
**பாலாநா னூற்றுநாற் பத்தொன்பான் - மேலாநாற்**
**பத்தொன்பான் சங்கமறு பத்துநா லாடலுக்கும்**
**கர்த்தன் மதுரையில் சொக்கன்**

***இதன் பொருள் :*** நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பது நூல்கலையும் அவற்றை இயற்றிய 4449 புலவர்களையும் அவர்களின் தலைவராகத் திகழ்ந்து நாற்பத்து ஒன்பதினரையும் உடைய மூன்று சங்கங்களுக்கும் அறுபத்து நான்கு ஆடலுக்கும் தலைவன் மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதப் பெருமானே.

**திருமாலின் பத்து அவ்தாரங்கள்**

திருமாலின் அவதாரங்கள் பத்தையும் ஒரு வெண்பாவில் அடக்கிப் பாடுக! என்று ஒரு புலவர் கேட்க உடனே காளமேகம் பாடிய இது.

**மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவில் பாதியில்என்**
**இச்சையில்உன் சென்மம் எடுக்கவா - மச்சாகூர்**
**மாகோலா சிங்காவா மாராமா ராமாரா**
**மாகோபா லாமாவா வாய்**

***இதன் பொருள் :*** சான்றோர் பாராட்டும் படியான புகழ் வாய்ந்த வேங்கடவா! ஒரு வெண்பாவில் பாதியில் என்கருத்திற்கு இசைய உன் அவதாரங்களை எடுத்துச் கூறவா! மச்சாவதாரம் கூர்மாவதாரம் கோலம் என்னும் வராக அவதாரம் நரசிங்க அவதாரம் வாமனாவதாரம் பரசுராம அவதாரம் ராமாவதாரம் பலராமன் கண்ணன் கல்கியவதாரம் ஆகிய பெருமானே.

**ஈயேற மலை குலுங்கும்**

ஈயேற மலை குலுங்கும் என்ற கருத்தமைய ஒரு வெண்பாப் பாடுக! என்று கேட்ட புலவர் முன் உடன் பாடிய வெண்பா இது. சிறுபொருளாகிய ஈ பெரிய பொருளாகிய மலைமீது எறினால் மலை எப்படிக் குலுங்கும்? காளமேகம் அயரவில்லை. அவர் பாடிய வெண்பாவில் ஈயேற மலை குலுங்கியது. எப்படி? வெண்பாவைப் பார்த்தால் தெரியும்

**வாரணங்கள் எட்டும் மகமேரு வும்கடலும்**
**தாரணியும் எல்லாம் சலித்தனவால் - நாரணனைப்**
**பண்வாய் இடைச்சி பருமத்தினால் அடித்த**
**புண்வாயில் ஈமொய்த்த போது**

***இதன் பொருள் :*** ஆயர்பாடியில் கண்ணனாய் அவதரித்த நாராயணனைப் பண்போல இனிமையாகப் பேசும் ஆயர்குலப் பெண்கள் அவன் வெண்ணெய் திருடிய போது தங்கள் கையில் இருந்த பெரிய மத்தினால் அடித்த போது ஏற்பட்ட புண்ணில் ஈ மொய்த்த போது எண்திசை யானைகளும் மிகப்பெரிய மேரு மலையும் ஏழு கடல்களும் ஏழு உலகங்களும் குலுங்கின.

அவனுள் அனைத்தும் அடக்கம் என்பதால் அனைத்தும் குலுங்கின என்ற நயம் சிறந்தது.

**பொன்னாவரை இலை காய் பூ**

பொன்னாவரை இலை காய் பூ என்ற சொற்கள் வருமாறு ஒரு வெண்பாப் பாடும் என்று ஒரு புலவர் கேட்க, காளமேகம் உடன் பாடிய வெண்பா இது.

**உடுத்ததுவும் மேய்த்ததுவும் உம்பர்கோன் தன்னால்**
**எடுத்ததுவும் பள்ளிக்(கு) இலையப் - படுத்ததுவும்**
**அந்நாள் எறிந்ததுவும் அன்பின் இரந்ததுவும்**
**பொன்னா வரையிலைகாய் பூ**

***இதன் பொருள் :*** திருமால் ஆடையாக உடுத்தது பீதாம்பரம் என்கின்ற பொன்னாடை கிருஷ்ணாவதாரத்தில் மேய்த்தது ஆ (பசு) இந்திரன் ஏவிய மேகங்கள் பொழிந்த பெருமழையில் இருந்து ஆயர்களைக் காப்பதற்காக எடுத்தது மலை (வரை) ஊழிக்காலத்தில் தான் வளர்வதற்காகப் படுத்தது ஆலிலை. கம்சன் ஏவிய இரண்டு அசுரர்களில் ஒருவன் விளா மரமாகவும் ஒருவன் கன்றாகவும் வந்து கண்ணனைக் கொல்ல முயன்ற போது கன்றை விளாமரத்தின் மேல் எறிந்தது மாவலியிடம் சென்று மூன்றடிமண் இரந்தது.

**கடல்நடுவில் செந்தூள் தோன்றிய அதிசயம்**

கடல்நடுவில் செந்தூள் தோன்றிய அதிசயம் எழுந்ததாகப் பாட முடியுமா? என்று கேட்ட புலவர் வியக்குமாறு கற்பனை செய்து காளமேகம் பாடிய பாடல் இது.

**சுத்தபாற் கடலின் நடுவினில் தூளி**
**தோன்றிய அதிசயம் இதுகேள்**
**மத்தகக் கரியை உரித்தவன் மீது**
**மதன்பொரு தழிந்திடும் மாற்றம்**
**வித்தகக் கமலை செவியுறக் கேட்டாள்**
**விழுந்துநொந் தயர்ந்தழு தோங்கிக்**
**கைத்தல மலரால் மார்புறப் புடைத் தாள்**
**எழுந்தது கலவையின் செந்தூள்**

***இதன் பொருள் :*** தூய பாற்கடலின் நடுவே தூளி தோன்றிய அதிசயத்தைக் கேள். தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்ட சிவபெருமானிடம் சென்று அழிந்த மன்மதன் அழிந்ததைக் கேட்ட தாமரை மேல் இருக்கின்ற அறிவுடைய திருமகள் காது பொருந்தக் கேட்டாள். உடனே கீழே விழுந்தாள். அயர்ந்தாள். ஓங்கி அழுதாள். தன் தாமரை மலர் போன்ற கையால் மார்பில் அடித்துக் கொண்ட போது அவள் மார்பில் பூசியிருந்த கலவைச் சாந்தின் செந்தூள் சிதறியது.

**மத்தால் அடித்தது**

ஆய்ச்சியர் கண்ணனை மத்தால் அடித்த செயல் செயல் கண்டு இரக்கப் படுவது போன்ற பொருள் அமைய ஒரு வெண்பாப் பாடுக என்று ஒரு புலவர் கேட்கக் காளமேகம் பாடிய வெண்பா இது.

**வண்ணங் கரியனென்றும் வாய்வேத நாறியென்றும்**
**கண்ணன் இவன் என்றும் கருதாமல் - மண்ணை**
**அடிப்பது மத்தாலே அளந்தானை ஆய்ச்சி**
**அடிப்பது மத்தாலே அழ**

***இதன் பொருள் :*** கண்ணனை யசோதைப் பிராட்டி அடிப்பது கண்ட ஆய்ச்சியர் கண்ணன் பெருமைகளை எடுத்துக் கூறி அவளின் அறியாமையை எண்ணி அழுதனர்.

**என்னை இடுக்கடி பாயைச் சுத்தடி**

அடுத்ததாக ஒரு புலவர் எழுந்தார். என்னை இடுக்கடி பாயைச் சுத்தடி என்ற ஒரு சொல்லைக் கொடுத்து ஒரு செய்யுள் சொல்லும் பார்ப் போம் என்றதும் அடுத்த நொடியில் காளமேகம் பாடிய வெண்பா இது.

தடங்கடலில் பள்ளிகொள்வோம் இதனை நற்சங்கரனார்
அடற்புலிக் குட்டிக்கு அளித்தாராம் - அது கேட்டு நெஞ்சில்
நடுக்கம் வந்துற்றது கைகால் எழா நளித்தியென்னை
இடுக்கடி பாயைச் சுருட்டடி ஏகடி அம்பலத்தே

*இதன் பொருள் :* தாமரையில் இருக்கும் திருமகளே! இந்தப் பாற்கடலில் நாம் பள்ளி கொள்வோம் என இதனைச் சங்கரனர் வலிய புலிக்குட்டிக்கு அளித்தனர்; அது கேட்டு நெஞ்சில் நடுக்கம் வந்து விட்டது. ஆதலால் என்னை உன் கக்கத்தில் இடுக்கிக் கொள். பாயையும் சுருட்டிக் கொள். உன் அண்ணனாகிய சிவனின் அம்பலத்திற்கு ஏகுக.

**மார்பிலே கொம்பு முளைத்தவாறு**

பன்றிக்கு மார்பிலே கொம்பு முளைத்தவாறு என்பதாக ஒரு செய்யுளில் கூறுக! என்றார் ஒரு புலவர் உடனே பாடினார் காளமேகம்.

தெருமுட்டப் பாளை சிதற வளர்பூகத்
தருமுட்டச் செல்வாளை தாவும் - திரு முட்டத்(து)
ஊரிலே கண்டேன் ஒருபுதுமை பன்றிக்கு
மாரிலே கொம்பான வாறு

ஸ்ரீமுஷ்ணம் என்ற ஊரிலே கோயில் கொண்டிருக்கும் இறைவன் பெயர் பூவராக சுவாமி என்பதாகும். அவர் மார்பிலே இருப்பவள் பூங்கொம்பு போன்றவளாகிய திருமகள். பெண்களைக் கொம்பு என்று அழைப்பதுண்டு. அதை வைத்துக் கற்பனையாகப் பாடிய வெண்பா இது.

*இதன் பொருள் :* தெருக்கள் நிறையப் பாளைகள் சிதறும்படி வளர்ந்த கமுக மரங்களின் மேலே செவ்வாளை பாய்கின்ற நீர்வளம் பொருந்திய திருமுட்டம் என்ற ஊரிலே ஒரு புதுமை கண்டேன்; அந்தப் பூவராக சுவாமி மார்பிலே பூங்கொம்பு இருந்தது. இங்கு கொம்பு என்பது திருமகளைக் குறிக்கும்.

**பொன்னாவரை இலை காய் பூ**

அடுத்து ஒரு புலவர் காளமேகத்தை நோக்கி நீர் பொன்னாவரை இலை காய் பூ என்ற தலைப்பில் பாடுக என்று கூறி இத்தலைப்பில்

முன்னர் பாடி இருப்பினும் மீண்டும் அதே பொருளில் பாடுக என்றார். சலிக்காத காளமேகம் உடனே பாடிய செய்யுள் - இது.

**தோய்ந்தான் மேய்த்தான் குடையாத் தூக்கினான் மேன்மேலாச்**
**சாய்த்தான் எறிந்தான்பின் சாப்பிட்டான் - ஆய்ந்துசொலும்**
**மன்னா வரத்தில்வரு மால்சாமி நாதாகேள்**
**பொன்னா வரையிலைனா பூ**

***இதன் பொருள் :*** இப்படிக் கேட்ட புலவர் சாமிநாதன் என்பவர். ஆதலால் சாமிநாதா! கேள் என்று பாடினார் காளமேகம். எதனையும் ஆராய்ந்து சொல்லும் மன்னன் சபையில் வருகிற போக்கிலே வந்தமர்ந்தவரே கேளும்.

திருமால் பொன் போன்ற திருமகளைக் கலந்து இன்புற்றான். (தோய்ந்தான்) பசுக்கூட்டங்களை மேய்த்தான். மலை (வரை) குடையாத் தூக்கினான் ஆலிலையில் படுத்தான் (சாய்ந்தான்) விளா மரத்தின் மேல் அதன் காயை எறிந்தான். பூமியைச் (மண்ணை) சாப்பிட்டான்.

*(தொடரும்...)*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

அழகு அணிச் சித்தர் என்ற சொல் பிற்காலத்தில் அழுகுணிச் சித்தர் என்று மாறி விட்டது. இவர் கூறும் ஒருசொல் முற்றிலும் மாறாக இருபொருள் தரும்படி கூறுவதில் வல்லவர். உலகில் பொருளுக்காகப் பிறரிடம் கையேந்திப் பெறுவதன் பொருட்டுக் கைகட்டி நிற்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. அந்நிலைக்கு ஆளாகாமல் என்றும் மெய்ஞ்ஞானத்தைத் தருமாறு அன்னை பராசக்தியை வேண்டுவதாக இவருடைய பாடல் போக்கு அமைந்துள்ளது. இவருடைய பாடல்களில் அணி அழகுற அமைந்துள்ளமையால் இவர் அழகு அணிச் சித்தர் என்று அழைக்கப் பட்டார் என்பர். இவருடைய பாடலின் இறுதியில் கண்ணம்மா என்று விளித்துப் பாடும் அமைப்பைக் காணலாம். இவர் பாடலின் கருத்துக்கள் படிப்பார்க்குப் புரியுமோ? புரியாதோ? பாடலில் காணப்படும் சந்தம் பயில்வார்க்கு இனிமை தருவதாக

அமைந்தமையே ஓர் அழகு தான். இனி அவற்றில் சிலவற்றைக் காணலாம். சித்தர் என்ற இந்த மனிதர் நடந்து கொண்டிருப்பார். அவர் கண்களிலிருந்து நீர் ஊற்றிக் கொண்டிருக்கும். அவரை அங்கே பார்த்தேன் இவ்விடத்தில் பார்த்தேன் என்பார்கள் ஆனால் எங்கும் தங்க மாட்டார்; முடிவில்லாத வழிப்பயணத்தில் போய்க் கொண்டே இருப்பார்; யார் எது கேட்டாலும் பதில் கூறவும் மாட்டார்; அவர் கண்கள் மட்டும் அழுது கொண்டே இருக்கும். இதனாலேயே இச்சித்தருக்கு அழுகண் சித்தர் என்று வழங்கினர். காலப்போக்கில் அழுகண்ணர் என்றும் அழுகணிச் சித்தன் என்றும் அழுகுணிச் சித்தர் என்றும் வழங்கினர் என்பதும் தெரிய வருகிறது. இச்சித்தர் ஊரைப் பார்த்து அழுதார் உலகைப் பார்த்து அழுதார் தன்னையே பார்த்தும் அழுதார்.

இவர் பாடலில் கண்ணம்மா என விளித்துப் பாடுவது இறைவனைப் பிற்காலத்தில் வந்த பாரதியாரின் கண்ணன் பாட்டு இதன் அடிப்படையில் தோன்றுகின்றது.

வேதாந்தக் கருத்துகள் வைத்தியம், யோகம், ஞானம் முதலான பல நிலைகளில் பாடியுள்ளார். அழுகண் சித்தர் பாடல் 200, ஞான சூத்திரம் 23 ஆகிய இரண்டு நூல்கள் அவருடைய படைப்புகளாகும்.

நாகப்பட்டினத்தில் உள்ள சிவபெருமான் கோயில் வளாகத்திலேயே அழுகண் சித்தர் சமாதியும் உள்ளது.

இவரது வரலாறோ அன்றிக் காலமோ துணிய முடியாதனவாக உள்ளது. திருநெல்வேலி மாவட்டம் திருக்குறுங்குடி அருகிலுள்ள அருள்மிகு திருமலை நம்பி திருக்கோவில் முன்புறம் உள்ள புளிய மரத்துக்கு அடியில் அவர் வசிப்பதாகக் கருதப்படுகிறது.

இந்த உடல் அழுக்கு நிறைந்த சடலம். உப்பு இருந்த பாண்டம் போன்றது. இதனை மாற்றி நல்லபடி பிறக்கச் செய்யும் மருந்து எனக்குக் கிடைக்கவில்லையே. அப்படி மாற்றிப் பிறக்கச் செய்யும் மருந்து ஒன்று எனக்குக் கிடைக்குமானால் இந்த அழுக்கு நிறைந்த உடலை விட்டுவிடுவேன். அப்படி நான் இந்த ஊற்றைச் சடலத்தை விட்டு என் கண்ணம்மா உன் பாதம் சேர மாட்டேனோ? இதோ இந்தக் கருத்துள்ள பாடல்

***ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி***

*மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுதில்லை*
*மாற்றிப் பிறக்க மருந்தெனக்குக் கிட்டுமென்றால்*
*ஊற்றைச் சடலம்விட்டே என்கண்ணம்மா!*
*உன்பாதம் சேரேனோ!*

இந்த உடம்பு எண்சாண் உடம்பு. அனைத்து உயிர்களும் எண்சாண் உடையதே; எறும்பு கூட அதன் கையால் அளந்தால் அதுவும் எண்சாண் உடையதே. இந்த உடம்புக்கு ஒன்பது வாயில்கள். பஞ்சாயம் பேச தொடுதல் பார்த்தல் சுவைத்தல் முகர்தல் கேட்டல் என்ற பஞ்சாங்கக்காரர்ஐம் பொறிகள் ஆட்சி செய்கின்றன. மேலுலகம் கீழுலகம் எனப் பட்டணங்கள் இரண்டு. இப்படி இருந்தும் நீ உலக வாழ்வில் அஞ்சாது பேசுகின்றாய். என் கண்ணம்மா! பின்னால் கடவுள் தரும் தண்டனைக்கு அஞ்சி உன்னை நெஞ்சார நினையாமல் என் நிலையைக் கடந்து வாழ்கின்றேனே!

*எண்சாண் உடம்படியோ ஏழிரண்டு வாயிலடி*
*பஞ்சாயக் காரர்ஐவர் பட்டணமும் தானிரண்டு*
*அஞ்சாமற் பேசுகின்றாய் ஆக்கினைக்குத் தான்பயந்து*
*நெஞ்சார நினையாமல் என்கண்ணம்மா!*
*நிலைகடந்து வாடுறேண்டி!*
என்பது அவருடைய புலம்பல்.

பிறப்பும் அதன்பின் வரும் இறப்பும் நமக்கு அச்சத்தை ஏற்படுத்துகின்றன. ஆனால் உடலெடுத்த ஆன்மா பிறப்பும் இல்லாதது. அந்த ஆன்மா தன் இயல்பை அறிந்தால் மரணபயத்தை இழந்துவிடும். இதனை ஆன்ம விடுதலை என்பர். வேதங்களும் இதைத்தான் கூறுகின்றன. ஆன்மாவாகிய நான் அழிவற்றவன். ஐம்பூதச் சேர்க்கையால் பருவுடல் மட்டுமே அழிகின்றது. பின்னர் வினைகளுக் கேற்ப வேறோர் உடலைத் தேடுகின்றது. ஆசைகளும் அவற்றால் விளைகின்ற வினைகளும் அற்றுவிடுமாயின் உடலைவிட்டு ஆன்மா ஓடாது. இவையே மேற்கண்ட பாடலின் உட்கருத்து.

மூலப்பதியாகிய புருவ மத்தியில் பஞ்சேந்திரியங்கள் கூடும் இடத்தில் நடுவே குதர்க்கத் தெரு என்று சொல்லக் கூடிய சுழிமுனைநாடி நடுவே நெருப்பாறு மயிர்ப்பாலம் ஆகிய அதன் நடுவே மேலேறும்

மூலக்கனல் என்று சொல்லப்படும் மூலாக்கினியாகிய மேலைப்பதியில் ஏற்படும் விளையாட்டைப் பார்ப்பேனா? என் கண்ணம்மா! அதாவது உதானன் என்று கூறப்படும் மூலாக்கினி முதுகுத் தண்டுவழி மேல் நோக்கி ஆறு ஆதாரங்கள் வழிச் சென்று புருவநடுவில் ஒன்று கூடிப் பெருநெருப்பாய் ஆகித் தலை உச்சியை அடைந்து அமுதமாய் ஆகச் செய்யும் யோக நிலையை வேண்டுவதாகப் பாடுகிறார் சித்தர். அப்பாடல் வருமாறு;

*மூலப் பதியடியோ மூவிரண்டு வீடதிலே*
*போலப் பதியடியோ குதர்க்கத் தெருநடுவே*
*பாலப் பதிதனிலே என் கண்ணம்மா!*
*விளையாட்டைப் பாரேனோ!*

இதன் திரண்ட கருத்து - புருவ மத்தியில் இராகம் காமம் கோபம் தவம் என்னும் ஐந்து அக்கினிகள் ஒன்று சேர்வதால் உண்டான மூலாக்கினி என்ற நெருப்பாறு மயிர்ப்பாலம் என்னும் சுழிமுனை நாடி வழியாக மேலேறி அடைந்து ஆன்மாவைச் சூழ்ந்துள்ள திரைகளாகிய மலங்களை எரித்து ஆன்மாவை விளக்கி அதன் அசைவைக் கண்ணால் காண்கின்றேன். இப்பாடலில் வரும் கண்ணம்மா என்ற சொல் ஆன்மாவைக் குறிக்கும். இவருடைய எல்லாப் பாடல்களும் ஆன்மா பாடுவதாக உள்ளன. ஆன்ம சுத்தியே இவரின் குறிக்கோளாக அமைந்துள்ளது. சில பாடல்களின் பொருளை உணர்வது சற்றுக் கடினம் தான். பிறரிடம் சென்று இரந்து பொருள் கேட்கும் நிலையைச் சாடுகிறார். சங்க நூலாகிய புறநானூற்றில் ஒரு புலவன் பாடும் போது ஈயென இரத்தல் இழிந்தது என்று பாடுவதைக் காணலாம்; அது போலவே அழுகணிச் சித்தரும் பாடுகிறார்.

நல்வழியைக் கைவிட்டுத் தீயவழியில் நடப்போர் துறவியாய் இருப்பினும் உணவுக்கும் உடைக்கும் திண்டாடுவர். அத்தகைய புல்லரிடம் மானமிழந்து பொருள் வேண்டிக் கையேந்தி பல்லைக் காட்டி விழிப்பர். இத்தகையோர்பால் சென்று இரந்திடாமல் என் கண்ணம்மா! நீயே பொருளைத் தா என வேண்டுகிறார்.

**புல்லர் இடத்தில்போய்ப் பொருள்தனக்குக் கையேந்தி**
**பல்லைமிகக் காட்டாமல் காட்டிப்பல்லை விழிக்கிறண்டி**
**பல்லைமிகக் காட்டாமல் பரக்க விழிக்காமல்**
**புல்லரிடம் போகாமல் என் கண்ணம்மா!**
**பொருள் எனக்குத் தாராயோ?**

அடுத்துப் பிறப்பிலே தொடங்கி இறுதி வரும்வரை வாழும் வாழ்வில் வேதாந்த வீட்டை அறிய முடியாத ஏக்கத்தைக் பாடுகிறார்.

தாயின் கருப்பையாகிய ஊரிலே இருந்து எங்கும் வெட்டவெளியாகிய ஊரிலே பிறந்து ஆன்மாவானது உடலாகிய ஊரிலே பிறந்து பின் வேதாந்த வீட்டை அடையும் வழி அறியேன். அப்படி அறிந்தால் பையூரும் மெய்யூரும் பாழாய் முடியாதோ என்று ஏங்குகிறார். இந்தப் பாடலின் கருத்தைக் கவியரசர் கண்ணதாசன் ஒரு திரைப்படத்தில் பாடுகிறார்,

**பையூரிலேயிருந்து பாழூரிலே பிறந்து**
**மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்**
**மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடந்தால்**
**பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா**
**பாழாய் முடியாதோ என்று பாடுகின்றார்**

வாழைப்பழம் தின்றால் வாய் நோகும் என்பதால் தாழைப் பழத்தைத் தின்றேன். அதனால் எனக்குச் சாவு வந்நது. அவ்வாறு சாவு வரக் கூடாது என்று கருதி வாழைப்பழத்தைத் தின்றேன். என் கண்ணம்மா அதனால் எனக்கு வாழ்வு வந்தது. இங்கு வாழைப்பழம் என்று சொன்னது வீட்டுலகை அதாவது மோட்ச வீட்டைக் குறித்தது. தாழைப்பழம் என்றது உலக வாழ்வைக் குறித்தது.

**வாழைப்பழம்தின்றால் வாய்நோகும் என்றுசொல்லி**
**தாழைப் பழம்தின்று சாவுஎனக்கு வந்ததடி**
**தாழைப் பழத்தைவிட்டுச் சாகாமல் சாகவல்லோ**
**வாழைப் பழம்தின்றால் என் கண்ணம்மா!**
**வாழ்வு எனக்கு வாராதோ?**

என்னுடைய வயிறு கொல்லனது உலைக்களம்போல் கொதிக்கின்றது. இவ்வாறு கொதிக்காதே நில் என்று சொன்னால் அது

நிலையாக நிற்க மறுக்கின்றது. நில்லென்று சொல்லி நிலை நிறுத்த வல்லார்க்கு என் கண்ணம்மா! கொல் என்று சொல்லி எமன் வந்து குடி கெடுக்க மாட்டானோ?

பசியை நினையாமல் அடக்காவிடில் இந்த உடல் எமனுக்கு இரையாகும் என்பது உட்கருத்து. இதனை விளக்கும் பாடல்

**கொல்லன் உலைபோலக் கொதிக்குதடி என்வயிறு**
**சொன்னால் நிலைநிறுத்தக் கூடுதில்லை**
**நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்குக்**
**கொல்லென்று வந்தநமன் என் கண்ணம்மா!**
**குடியோடிப் போகானோ?**

மாமனது மகளோ? மச்சினியோ? நான் அறியேன். ஆனால் மன்மதனது மலர்க்கணைகள் பட்டு என் உடல் நெருப்பாக வேகின்றது. மாமன் மகளாகி மச்சினியும் நீ ஆனால் மன்மதனது மலர்க்கணைகள் என் கண்ணம்மா! உன் கண்பட்டு வேக மாட்டாதா? இந்தக் கருத்துடைய பாடல்

**மாமன் மகளே மச்சினியோ நானறியேன்**
**காமன் கணையெனக்குக் கனலாய் வேகுதடி**
**மாமன் மகளாகி மச்சினியும் நீயானால்**
**காமன் கணைகளெல்லாம் என் கண்ணம்மா!**
**கண்விழிக்க வேகாவோ?**

அதில் வெளியை வில்லாக வளைத்து நமசிவாய என்னும் ஐந்தெழுத்தை அம்பாக்கி மந்திரம் என்னும் தேரிலேறி மான் வேட்டையாடுவதற்குச் சந்திர சூரியர்கள் போந்த பொழுது என் கண்ணம்மா! அந்தப் பூங்காவனத்தில் மனமகிழ்வுடன் இருக்கின்ற நாள் எந்த நாளோ? அதை விளக்கும் பாடல்

அந்தரத்தை வில்லாக்கி ஐந்தெழுத்தை யம்பாக்கி
மந்திரத் தேரேறியல்லோ மான் வேட்டையாடுதற்குச்
சந்திரருஞ் சூரியருந் தாம் போந்த காவனத்தே
வந்து விளையாடியல்லோ என் கண்ணம்மா
மனமகிழ்ந்து பார்ப்பதென்றோ

*(தொடரும்...)*

# பட்டினத்தார் பைந்தமிழ் - 20

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

அகவல் என்ற சொல், கூவி அழைத்தல் எனப்பொருள்படும். இது பாவகையுள் அகவற்பா என ஓசை தொடர்பாகக் கூறப்பட்டாலும் ஒருவரை அழைத்துக் கூறும் முறையில் பாடுவது அகவற்பா எனப்பட்டது. அந்த வகையில் முனிபுங்கவராகிய பட்டினத்தார் பாடும் கச்சித் திருவகவலானது அனைத்தும் அழிதற்குரியதான தோற்ற வாழ்வைப் பெற்ற மக்களே! தெளிவுறக் கேளுங்கள்! எனக் கூவி அழைத்து நிலையாமைத் தத்துவத்தை உணர்த்தி நிலைத்ததை நினைவூட்டுவதாக ஒரு பாடலில் கூறுகிறது.

தோன்றியழியும் மாய காரியமாகிய உடலையே பொருள் எனக் கொள்ளாது சிவத்தைப் பொருளெனக் கருதக் கோயில் திருஅகவலில் சிற்றின்பச் சேட்டையால் அழியாதிருக்க அறிவுரை கூறுகிறார். கச்சி என்பது காஞ்சி என்பதாயினும் சிற்றின்ப நுகர்வுக்குரிய பெண்போகத்தைத் தூண்டுவது பெண்டிரின் கச்சணிந்த மார்பு என்பதால் அதனை நினைப்பிக்கும் பொருத்தத்திலும் கச்சித் திரு அகவல் எனப்பட்டதோ என எண்ணத் தோன்றுகிறது. எனினும் முற்றுந்துறந்த சித்தராம் அடிகள் அவ்விழி நினைப்பிற்கு இடந்தராத நிலையிலேயே கச்சி அகவல் எனக் கூறாமல் கச்சித் திரு அகவல் உணர வேண்டும்.

கச்சித்திரு என்றால் கச்சியம் பதியில் வீற்றிருக்கும் திருவருள் சொரூபமான இறையை முன்னிலைப் படுத்தி மக்களுக்கு அறிவுரை பகர்ந்த பாடல் என்பதால் பொருள் உணருமாறு அத்தலைப்பு அமைந்துள்ளது என உணர வேண்டும் என்பதாகும்.

திரு என்பது கண்டாரால் விரும்பத்தகும் தன்மை நோக்கம் எனத் தொல்காப்பிய உரையாசிரியருள் ஒருவரான பேராசிரியர் என்பார் கூறினார். அந்தவிதமாகப் பட்டினத்தார் அழியும் சிற்றின்ப மாதரைப் போகப் பொருளாகப் போற்றுதலை ஒழிந்து கச்சியில் கடவுளை யிறைஞ்சுமின் என்றார்.

**போக மாதரைப் போற்றுதல் ஒழிந்தே**
**கச்சியில் கடவுளை யிறைஞ்சுமின்**

என்பது பட்டினத்தார் வாக்கு!

இப்பாத் தொடரை இலக்கண நுட்பத்தோடே நுகர்ந்தால் பட்டினத்தார் பெண்டிரை வெறுக்காத வகையாகக் கூறியதன் உண்மையை உணர முடியும். அதாவது போக மாதரைப் போற்றுதல் ஒழிந்து (நீக்கி) கச்சியில் கடவுளாக இறைஞ்சுமின் எனப் பெண்டிரைக் கடவுளாகக் கருதத் தூண்டுவதாகக் குறிப்பாய் உணர்த்தினார் எனலாம். இவ்வாறாக உணரும் போது தான் காணும் பெண்டிரை வேற்று நினைப்பாகக் காணாத தெய்வீகமாகக் காணும் உணர்வை உணர்த்தியதாகப் பொருள் உணர முடியும்.

மாதரைப் போற்றும் நிலையை ஒழித்துக் கச்சிக் கடவுளை வணங்குக எனக் கூறுவது இயல்பான கருத்துப் பொருளாயினும் பெண்டிரைத் தெய்வீகமாகப் பார்க்கும் பார்வையைப் பழந்தமிழ் நூல்கள் கூறிய வழிப் பட்டினத்தாரும் கச்சியில் கடவுளாக இறைஞ்சுமின் என்றார் போலும் எனலாம். அதாவது கச்சணிந்த பெண் தெய்வமாகக் காணச் செய்தல் என்பது கருத்து.

தனியிடத்தில் கண்ட ஒருபெண்ணை ஓர் ஆடவன் அணங்கு கொல் எனப்பார்த்ததாக வள்ளுவர் (1081) கூறுவது தெய்வீகப் பார்வையாகும். அணங் கென்பது பொதுவாகப் பெண் என்ற பொருளாயினும் சிறப்பாகத் தெய்வப் பெண் என்பது கருத்து. அதுவும் தீண்டிவருத்தும் தெய்வப் பெண் என்பதும் கருத்தாகும். மனத்தால் வசீகரிக்கப்பட்ட பெண்ணை உடலால் தீண்ட முயற்சிப்பின் அதனால் ஏற்படுவது துன்பம் என்ற முதல் அச்ச உணர்வோடே நெருங்க, படிப்படியாக அது இன்பமாக மாறும் என்ற கணிப்பை உணர வைக்கும் விதமாகவே அப்பெண்ணின் இன்ப நளினக் குறிப்பை நினைவூட்ட ஆய்மயில் கொல்லோ? என்று அடுத்துக் கூறினார்.

இக்கருத்துக்களை யெல்லாம் ஒன்று திரட்டிய வகையில் தான் திரு என்பது கண்டாரால் விரும்பத்தகும் தன்மை நோக்கம் என்றார் பேராசிரியர். அந்தக் கருத்துச் செறிவின் வழியே பட்டினத்தாரும், போகமாதரைப் போற்றுதல் ஒழிந்து கச்சியில் கடவுளாக இறைஞ்சுமின் என்றார் போலும்.

ஈண்டு இப்பாத் தொடரில் அமைந்த ஒழிந்தே என்ற சொல்லின் ஈற்று ஏகாரம் ஒழிந்து (நீங்கி) நிற்பதுபோலக் கடவுளை என்ற சொல்லைக் கடவுளாக எனப் பொருள் பொருத்தத்திற்காக ஐ – என்ற

இரண்டாம் வேற்றுமையை ஆய் எனும் வினையாக்கி, கடவுளாய் இறைஞ்சுமின் எனப் பொருள் காணச் செய்தார் எனலாம்.

ஆய் என்பது ஆக என்பதன் கருத்தாகும். இங்ஙனம் மாற்றுவதைப் பொருள் மயக்கத்தின் பாற்படுவதாக ஒரோ வழி உணரலாம் என்ன.

ஓர் உருபு இருக்க வேண்டிய இடத்தில் மற்றோர் உருபு இருப்பதை உருபு மயக்கம் என்பர் இலக்கணிகள்; அவ்வாறு பெயர்ப் பொருளைத்தரும் உருபு – வினைப்பொருளுக்குரிய உருபாகக் கருதிக் கொள்வதைப் பொருள் மயக்கம் என்பதும் உண்டு. ஆக பட்டினத்தார் பெண்டிரோடு வாழும் வாழ்க்கை இலட்சியம்மிகுந்த இலட்சணமானது என்பதை உணர்த்தவே கச்சித்திரு அகவலில் சிற்றின்ப வெறுப்பை உணர்த்திப் பேரின்ப நிலைக்கு மனிதரை உயர்த்த, தெளிவுறக் கேண்மின் என்றார் எனலாம்!

தோன்றி மறைவது சிற்றின்பம்! தோன்றியும் மறையா திருப்பது பேரின்பம். செந்தேன் தரும் இன்பம் சிற்றின்பம்; நாவில் பட்டதும் இனிக்கும். பிறகு நிலைக்காமல் அழியும். ஆனால் அதே நாவால் உச்சரிக்கப்படும் மொழி நலம் அழியாது என்றும் இனிக்கும். இந்த உவமைவழி உற்று நோக்கும் விதமாகவே பட்டினத்தார் சிற்றின்ப, பேரின்ப அடுக்கினை நிரல்படுத்திப் பேரன்பிற்கு மானுடரை அழைத்தார்.

மானுடத்து உதித்து வாழும் மானுடர்க் கெல்லாம் யான் எடுத்துரைப்பேன் கேண்மின்! எனத் தொடங்கும் பட்டினத்தார், பெண்டிரின் உறுப்புகளைப் பல்வேறாகப் பொய்ப் பாராட்டாய்ப் புகழ்ந்து வாழ்வதால் என்ன பயன்? என வினவுகிறார்.

கூறிய பெண்விழைவு பற்றிய கருத்துக்களைப் பரத்தமைக்குரிய பெண்ணின்ப இழிவுக்காகக் கூறப்பட்டதாக உணர்ந்தாலும் பொது நிலையில், இல்லற நிலையில் பெண்வழிச் சேறலான சிற்றின்பத்தையும் உள்ளடக்கமாகக் கூறப்பட்டதாய்ப் பெரும்பாலும் உணர வேண்டும். ஏனெனில் எல்லா ஆடவரும் பரத்தமை என்ற இழி நிலை வாழ்வைப் பெறுவதில்லை என்பதால் இல்லறப் பெண்போகமே இதன் பரத்ததோ மோட்சம் எனக் கழிகாமுகன் கூறும் இழிவு பற்றி இறையானர் அகப் பொருள் உரையின் கருத்தில் இல்லற போகத்தைப் பெரியதாக உணர்த்தியதாகவே உணர வேண்டும்.

பாலென்பது மொழி, பஞ்சென்பது பதம், பாவையர் கண்சேல் என்பதாகத் திரியும் என அருணகிரியாரும் இல்லறப் போக நுகர்வையே சுட்டினார் என்பதால் பட்டினத்தார் புறம்போகிய பெண்டிரைக் குறிக்காத நிலையில் இல்லற போகமே போகம் என இல்லாமல் அதனைத் துறந்து ஆன்மீக நாட்டத்த தாய் வழிகூறக் கச்சித்திருவகவல் பாடலைப் பட்டினத்தார் பாடினார் என்பது நுட்பமாய் உணரத்தக்க பேரின்பமாம் என்க! இங்ஙனம் அடிகள் பாடிய இதனைப் பின்பற்றியே பாரதியார் மாதர் தம்மை இழிவு செய்யும் மடமையைக் கொளுத்துவோம் என்றார் போலும்!

எனவே மருவு பெண்ணாசை ஒழிப்பைப் பட்டினத்தார் கூறுவதால் ஆன்மீகக் கொழிப்பு உருவாகும் எனலாம். இக்கருத்தாடலை மையப் படுத்தியே அடுத்து திரு ஏகம்ப மாலையைப் பட்டினத்தார் பாடியதை உணர்வோமாக!

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கல்வி

**அரசன் மற்றும அனைவரும் கற்றற்குரிய நூல்களைக் கற்றல்**

**1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக.**

கற்க – கற்க; கசடற – குற்றமற; கற்பவை – கற்க வேண்டியவற்றை; கற்றபின் – அவ்வாறு கற்றபிறகு ; நிற்க அதற்குத் தக – கற்றவற்றிக்கு ஏற்ப அவை சொல்லும் நெறியில் நிற்க.

கற்க வேண்டியவற்றைக் குற்றமறக் கற்க வேண்டும்; அவ்வாறு கற்றபின் அவற்றிற் கேற்ப அவை சொல்லும் நெறியில் நிற்க வேண்டும்.

கற்க, நிற்க – வியங்கோள் வினைமுற்று.

கற்பவை – செயப்படு பொருள். நூலுக்கு ஆகி வந்தது ; தொழிலாகு பெயர்.

**2. எண்என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்என்ப வாழும் உயிர்க்கு.**

எண்என்ப – கணக்கு என்று சொல்லுவர்; ஏனை எழுத்தென்ப –

மற்றும் எழுத்து என்று சொல்லுவர்; இவ்இரண்டும் - இந்த இரண்டும்; கண்என்ப வாழும் உயிர்க்கு - உலகில் வாழும் உயிர்களுக்குக் கண்கள் என்று சொல்லுவர்.

கணக்கு என்பதும் எழுத்து என்பதும் உலகத்து உயிர்களுக்குக் கண்கள் என்று சொல்லுவர்.

என்ப - படர்க்கைப் பலர்பால் வினைமுற்று.

3. கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

கண்ணுடையர் என்பவர் - கண்ணுடையவர் என்று கருதப்படுபவர்கள்; கற்றோர் - கல்வி கற்றவர்தாம்; கல்லாதவர் - கல்வி இல்லாதவர்; முகத்திரண்டு புண்ணுடையர் - தங்கள் முகத்தில் இரண்டு புண்களை உடையவர் ஆவார்.

கல்வி கற்றவர்தாம் கண்ணுடையவர் என்று கருதப்படுவர்கள், மற்ற கல்வி இல்லாதவர்கள் தங்கள் முகத்தில் இரண்டு புண்களை உடையர் ஆவர்.

4. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.

உவப்பத் தலைக்கூடி - அனைவரும் மகிழுமாறு அவரோடு கலந்திருந்து; உள்ளப் பிரிதல் - பிறகு நினைக்குமாறு பிரிதல்; அனைத்தே புலவர் தொழில் - அத்தகையதே கற்றவர்களின் தொழில்.

கற்றவர்களின் தொழில் அனைவரும் மகிழுமாறு அவரோடு கலந்திருந்து மற்றவர் அவர்களை நினைக்குமாறு பிரிதல் தன்மை உடையது.

உள்ள - பெயர் எச்சம்.

5. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்.

உடையார்முன் இல்லார்போல் - செல்வர்களுக்கு முன்னால் வறியவர்கள் போல்; ஏக்கற்றும் - பொருள்பெற ஏங்கி நின்றாற் போல்; கற்றார் - கல்வி கற்றவர்களே கற்றவர்; கல்லாதவர் கடையரே - கல்லாதவர்கள் இழிந்தவராவர்.

செல்வர் முன்பு வறியவர்கள் பொருள் பெறுவதற்காக ஏங்கி நின்றாற் போல, ஆசிரியர் முன் நின்றாவது கல்வி கற்க வேண்டும்; இல்லையேல் கல்லாதவர் கீழானவராகக் கருதப்படுவர்.

உடையார், இல்லார்,
கற்றார், கல்லாதவர் - முரண்

**6. தொட்டனைத்து ஊறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.**

தொட்டனைத்து ஊறும் - தோண்டிய அளவிலேயே நீர் ஊறும்; மணற்கேணி - மணலின் கண் கேணி; மாந்தர்க்கு - மக்களுக்கு; கற்றனைத் தூறும் அறிவு - கல்வி கற்ற அளவிலேயே அறிவு ஊறும்.

மணலின் கண் கேணியைத் தோண்டிய அளவிலேயே நீர் ஊறும்; அதுபோல மக்களுக்குக் கல்வி கற்ற அளவிலேயே அறிவு ஊறும்.

மணற்கேணி - ஏழாம் வேற்றுமைத் தொகை.

**7. யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.**

யாதானும் நாடு ஆம் - எந்த நாடாக இருந்தாலும் தன்னாடாகும்; ஊராமால் - எந்த ஊரும் தன் ஊராகும்; என்னொருவன் - ஒருவன் எதற்காக ; சாந்துணையும் கல்லாதவாறு - இறக்கின்ற அளவும் கல்வி கல்லாதிருப்பது;

கல்வியினால் ஒருவனுக்கு எந்த நாடும் தன் நாடாம்; எந்த ஊரும் தன் ஊராகும்; அவ்வாறிருக்க ஒருவன் தான் இறக்கின்ற அளவும் கல்வி கல்லாதிருப்பது எதற்காக?

ஆல் - அசை; யாதானும் - முற்றும்மை

**8. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு
எழுமையும் ஏமாப் புடைத்து.**

ஒருமைக்கண் - ஒருபிறவியில்; தான் கற்ற கல்வி - ஒருவன் கற்ற கல்வி ; ஒருவற்கு - ஒருவனுக்கு; எழுமையும் - ஏழு பிறப்பிலும்; ஏமாப் புடைத்து - உதவிக் காக்கும் தன்மை உடையது.

ஒருவன் ஒரு பிறவியில் கற்ற கல்வி அவனுடைய ஏழு பிறப்பிலும் அவனுக்கு உதவிக் காக்கும் தன்மை உடையது.

9. தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

தாம் இன்புறுவது - தாம் இன்புறுதற்குரிய கல்வியை; உலகு இன்புறக் கண்டு - உலகத்தார் விரும்பி மகிழும் மகிழ்ச்சியைக் கண்டு; காமுறுவர் - மேலும் விரும்புவர்; கற்றறிந்தார் - கல்வி அறிவில் சிறந்தவர்கள்.

கல்வி அறிவில் சிறந்தவர்கள் இன்புறுதற்குரிய கல்வியினை உலகத்தவர் விரும்பி மகிழும் மகிழ்ச்சியைக் கண்டு மேலும் கல்வியை விரும்புவர்.

உலகு - ஆகுபெயர்.

10. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை.

கேடில் - அழிவு இல்லாத; விழுச் செல்வம் - பெருமை மிக்க செல்வம்; கல்வி - கல்விதான்; ஒருவற்கு - ஒருவனுக்கு; மாடல்ல - செல்வமல்ல; மற்றையவை - மற்ற செல்வங்கள்.

ஒருவனுக்குக் கல்விதான் அழிவு இல்லாத பெருமை மிக்க செல்வம்; மற்ற செல்வங்கள் செல்வங்கள் அல்ல.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### வளையல் விற்றது

தாருக வனத்தில் இருந்த ரிஷிபத்தினிகளின் கற்புநிலையை அளந்துகாட்டும் பொருட்டு முன்பொருக்கால் சிவபெருமான் பிட்சாடனர் திருக்கோலம் பூண்டருளினார். மன்மதனே தவக்கோலம் கொண்டு வந்தது போலிருந்தது. அவரது திருவுருவத்தையும் அமுதகீதத்தையும் கண்டு கேட்ட ரிஷிபத்தினிகள் தங்கள் நிறையழிந்தனர். பிச்சையிடவந்த பத்தினிமார்கள் தவ மூர்த்தியைக் கண்டு காமத்தால் மதிமயங்கி அவரது பாத்திரத்திலே பிச்சையுடன் தங்கள் வளையல்களையும் போட்டுவிட்டனர். நாணம் இழந்ததோடு நில்லாமல் இடுப்பிலே அணிந்திருந்த மேகலையையும் இழந்தனர். அவர்களது ஆடைகள் நெகிழ்ந்தன. அவர்கள் அனைவரும் கரம்

குவித்துப் பிச்சைப்பெருமானின் திருவடியில் விழுந்து எமக்குத் துணை நீரே என்று சொல்லி அவரைத் தழுவ நெருங்கினர். இறைவன் விலகி விலகிச் சென்றான். அப்போது அம் மாதர்கள், எம்மைத் தழுவாது போனால் அவிழ்ந்துபோன ஆடையையாவது உடுத்திவிடுங்கள்; கைகளை விட்டுக் கழற்றிய வளையல்களை வேண்டினர். நாளை வந்து இடுவோம் என்று கூறிப் பிட்சாடன மூர்த்தி மறைந்தருளினார்.

தாருக வனத்துப் பத்தினிகள் பிச்சைமூர்த்தி கவர்ந்து சென்ற நாணத்தையும் மனத்தையும் மீட்க முடியவில்லை. ஆடைகளும் வளையல்களும் ஒழியப்பசலை படர நின்றிருந்தனர். தமது பத்தினியரின் அலங்கோல நிலையைக் கண்டனர் கணவர்களாகிய ரிஷிகள். சோமசுந்தரப் பெருமானே இவ்வாறு வந்து திருவிளையாடல் புரிந்தாரென்பதைத் தமது ஞான திருஷ்டியால் தெரிந்து கொண்டனர். ரிஷிகள், கற்பு நிலையில் மாறிய தமது மனைவிமார்களைப் பார்த்து, நீங்கள் மதி மயங்கினீர்கள் ஆதலால், மதுரை மாநகரத்தில் வசிக்கும் வணிகக்குல மகளிர்களாகப் பிறப்பீர்கள், செல்லுங்கள், என்று சாபம் ஈந்தனர். மனைவிமார்கள் எங்களுக்குச் சாப விமோசனங்கள் எப்படி எப்போது என்று வேண்டி வினவினர். மதுரை மாநகருக்கு இறைவனாகிய சோமசுந்தரப் பெருமான் உங்களுடைய கைகளைத் தொடும்போது சாபம் விலகும் என்றனர் ரிஷிகள்.

ரிஷி பத்தினிகள் அனைவரும் சாபத்தில் சிந்தை தளர்ந்தார்கள். மதுரை மாநகரத்திலே வணிகர் குலத்திலே பெண்டிராக வந்து தோன்றினார்கள். வளர்ந்து வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்து அழகும் இளமையும் பொங்க விளங்கினார்கள். அக்காலம் குலபூஷண பாண்டியன் செங்கோல் செலுத்தி வந்தான்.

சிவபெருமான் பண்டைய ரிஷி பத்தினியர் பால்கருணை காட்டத் திருவுளம் கொண்டார். தனது திவ்ய மேனியை மறைத்துக் கொண்டு வளையல் விற்கும் வணிகர்போல வேஷம் புனைந்தார். தான் முன்பு ரிஷி பத்தினியர்களிடம் கவர்ந்து வந்த அதே வளையல்களைப் பட்டுக்கயிற்றிலே கோத்துக் கொண்டு வந்தார். அவற்றையே திரும்ப அவர்களுக்கு இடுவோம் என்று திருவுள்ளம் கொண்டார். மதுரைப் பெருவீதிகளிலே, வேதமுரைக்கும் தம் திருவாயினால் வளையல்

வாங்குவீர் வளையர் வாங்குவீர் ! என்று இயம்பிச் சென்றார். வணிகர் குல மங்கையர் அனைவரும் திவ்யக் குரல் கேட்டுச் சிந்தை தளர்ந்தவராய் வீதிக்கு ஓடிவந்து வளையல்காரர் முன்பு நின்றார்கள். மன்மதனை நிகர்த்த எழிலுருவத்தைக் கண்டு காமுற்றனர். முதலில் அச்சம் முதலான நால்வகைக் குணங்களும் தடை செய்து நிறுத்தின. மனம் தடுமாறிய வணிகக்குல மகளிர் நிலைகுலைய வளையல் விற்பவரைச் சூழ்ந்து நின்றனர். தங்களது மங்கலக் கைகளுக்கு வளையல் இடுமாறு வணிகரைக் கெஞ்சிக் கரங்களை அவர் முன்னே நீட்டினர். வணிகப் பெருமானும் தம் திருக்கரத்தால் மங்கையினரின்கைகளைப் பற்றி முகிழ்ப்பித்துப் பலவகையான நல்லவளையல்களை இட்டுக் காதலைப் பெருக்கினார். மங்கையரும் மனம் இழந்தவராகித் திரும்பத் திரும்ப ஏதேனும் ஒரு காரணத்தை வைத்துக் கொண்டு தேவ வணிகர் முன்னே வந்து நின்றனர். அவர்கள் மனமும் நெகிழத் தொடங்கியது. வணிகரே ! இம்மாதிரியான சிறந்தவளையல்களை நாங்கள் எங்கும் இதற்கு முன்பு பார்த்தது கிடையாது. இவ்வளையல்களெல்லாம் எங்களைப்புளகாங்கிதம் அடையச் செய்தன. நாளைக்கும் வளையல் போட வரவேண்டும்; சற்றே இருங்கள் வளையல்களுக்கான விலையைத் தருகிறோம் என்று சொல்லினர். அதற்கென்ன? விலையை நாளைக்கு வாங்கிக் கொள்கிறேன் என்று கூறிவிட்டு மறைந்தருளினார், வணிக தேவர்.

மதுரை மக்கள் அனைவரும் வளை வணிகராக வந்து வணிகுல மகளிரின் சிந்தை கவர்ந்து சென்றவர் சிவ பெருமானே என்பதைத் தெரிந்து ஆச்சரியம் அடைந்தனர். ஆனந்த பாஷ்பம் பெருகப் பெரு மகிழ்ச்சி அடைந்தனர்.

சோமசுந்தரப் பெருமானே தமது திருக்கரத்தால் தொட்டு வளையல் அணிவித்த பாங்கினால் வணிகர்குல மங்கையர்கள் எல்லாரும் கருவுற்றனர். முருகப் பெருமானை நிகர்த்த அளவற்ற புத்திரர்களைப் பெற்றனர். அந்தத் திருக்குமாரர்கள் எல்லாரும் பெருமையும், வீரமும் வெற்றியும் களிப்பும் கொண்டு வாழ்ந்து வந்தனர்.

வணிக மாதர் அனைவரும் சிவபெருமான் திருவருளால் சில நாட்கள் இருந்து வாழ்ந்து பின்னர் சிவலோகம் சென்றனர்.

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்